# அருணோதயம்.

# ARUNODAYAM,

## Tranquebar Mission Journal.

VOL. XXXIII. MAY. NO. 5.

பொருளட்டவணை:



PRINTED AT THE EVANG. LUTHERAN MISSION PRESS.

*E. Maennig.*

1896.

# அருணோதயம்.

தரங்கன்பாடி

மிசியோன் பத்திரிகை.

No. 5. மே 1896.


### மரண அறிக்கை.

நமது மிசியோனாரியாக இத்தேசத்தில் 28 வருஷக் காலம் கர்த்தருக்கு ஊழியஞ் செய்த சங். அந்திரேயா மயர் ஐயரவர்கள் நாளது ௲ மார்ச்சு மீ 19-ம் உ பவாரியா நாட்டில் உள்ள நீர்ன்பேர்க் பட்டணத்துக்குச் சமீபமான சிர்ன்தோர்பு (Zirndorf) ஊரில் கர்த்தருக்குள் மரித்ததாக சமாச்சாரம் வந்தது. அவருக்கு வயது 58. துக்கத்துக்குள்ளான அவருடைய குடும்பத்துக்குக் கர்த்தர் நல்லாறுதலைக் கட்டளையிடுவாராக.

## திருவாக்கு தியானம்.

### பரிசுத்த ஆவி.

*எல்லாரும் பரிசுத்த ஆவியினால் நிரப்பப்பட்டு, ஆவி தங்களுக்கு விளம்பக் கொடுத்தபடி, மறு பாஷைகளிலே பேசத்துவக்கினார்கள் (அப். ௨, ௪).*

*நமதிரட்சகர் பரத்துக்கேறுமுன் தமது சீஷரை நோக்கி: உங்கள்மேல் பரிசுத்த ஆவி வரும்போது நீங்கள் பெலன் அடைந்து, எருசலேமிலும் யூதேயா சமாரியா தேசங்களில் எங்கும், பூமியின் கடைசிமட்டும் எனக்குச் சாட்சிகளாயிருப்பீர்கள் என்றார். இதின்படியே கிறிஸ்துவுக்குச் சாட்சிகளாயிருப்பதே பரிசுத்தஆவி ஊற்றப்பட்ட நோக்கம்.*

*பராபரனுடைய குமாரன் தமது பிதாவுக்குச் சாட்சி கொடுக்கும்படி இப்பூமிக்கு வந்தார். பூலோகத்தாரோ அவரை அசட்டை பண்ணிக் கொலைபுரிந்தார்கள். அவர் பரத்துக்கேறியபின் அவருக்குச் சாட்சிகொடுக்கும்படி பரிசுத்த ஆவி இறங்கினார். அவரால் திருச்சபை ஸ்தாபிக்கப்பட்டு கிறிஸ்துவுக்காகச் சாட்சி கொடுக்கும் உயிருள்ள சாட்சி ஆயிற்று.*

பரிசுத்த ஆவியானவரையன்றி ஒருவனும் கிறிஸ்துவை விசுவாசிக்கவும், கிறிஸ்துவுக்குச் சாட்சியாயிருக்கவும் கூடவே கூடாது. பரிசுத்த ஆவியின் ஈவைப் பெறுமுன் கிறிஸ்துவினுடைய சீஷப்பிள்ளைகள் இருந்த நிலைமைக்கும், அந்த ஈவைப் பெற்றபின் அவர்கள் இருந்த நிலைமைக்கும் பெரிய வித்தியாசம். முன்னே அவர்கள் கோழைகள், இப்பொழுதோ வீரர்கள். கிறிஸ்து பாடுபட்ட காலத்தில் அவரை விட்டு ஓடிப்போய் கதவுகளைப் பூட்டிக்கொண்டிருந்தவர்கள் பெந்தெக்கொஸ்தே நாளில் திரள் கூட்டத்தின் நடுவே கிறிஸ்துவுக்குச் சாட்சி கொடுக்கிறார்கள். பேதுரு அப்போஸ்தலன் கிறிஸ்துவை அறியேன் என்று மறுதலித்த இடத்திலேயே, ஏழைப் பாவிகளுக்கு கிறிஸ்துவின் இராச்சியத்தைத் திறந்துவிடுவது பெரிய அதிசயமன்றோ. ஒரு பெண்பிள்ளைக்கு முன் கலங்கி நின்று கிறிஸ்துவை மறுதலித்தவன் கிறிஸ்துவைக் கொன்ற கொலைபாதகர் நடுவே கிறிஸ்துவுக்குச் சாட்சி கொடுக்கத் துணிந்தது பெரிய ஆச்சரியமல்லவோ.

நாமும் கிறிஸ்துவுக்குள் வெளிப்பட்ட பராபரனுடைய கிருபையின் ஆலோசனையைப் பயமற்ற தைரியத்தோடும், கலப்பற்ற உண்மையோடும், உள்ளது உள்ளபடியே வெளிப்படுத்தும் சாட்சிகளாவதற்கு நமக்கும் பரிசுத்த ஆவியின் ஊற்றுதல் அவசியம். பரிசுத்த ஆவியின் ஏவுதலும் பெலனுமின்றி நாம் கொடுக்கும் சாட்சி பயனற்றதாம். அஞ்ஞானம் நிறைந்த நமது தேசத்தில் உழைக்கும் சகல போதகமாரின் ஊழியம் வாய்க்கவும், இருள் நீங்கி அருள் ஓங்கவும் பரிசுத்த ஆவியின் பலம் அத்தியாவசியகமாம். "பலத்தினாலும் அல்ல, வல்லமையினாலும் அல்ல, நம்முடைய ஆவியினாலே ஆகுமென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்" (சக. ச, ௬).

பரிசுத்த ஆவியினால் நிரப்பப்பட்டவர்களாய் அப்போஸ்தலர்கள் பிரசங்கித்த வசனம், அதைக் கேட்டவர்கள் இருதயத்தை ஒரு கத்திபோல் அறுத்தது. அப்படியே ஸ்தேவானுடைய வார்த்தைகளும், கேட்டோர் இருதயங்களை அறுத்தபடியினாலே அவன்பேரில் பற்கடித்தார்கள். வேஷமும் மாயமும் நிறைந்த பேர்க்கிறிஸ்தவர்கள் பெருகியிருக்கும் இக்காலத்திலே தேவஊழியர்கள் இருதயங்களை அறுக்கும் பிரசங்கங்களைச் செய்யக் கூடும்படி பரிசுத்த ஆவியின் விசேஷித்த ஒத்தாசை மகா அவசியம்.

இந்த உன்னத ஈவைக் கேட்கிறவர்களுக்குக் கொடுக்கப் பிதா பிரிய சித்தமாயிருப்பதால், நாம் அதற்காக உட்கருத்தாய் செபித்து, கிருபையின் எத்தனங்களைச் சர்வ சாக்கிரதையுடன் கையாடுவோமாக.



## பத்திராதிபர் குறிப்புகள்.

இந்த மேமீ உஎ. உஅ. உகூ-ம் தேதிகளில் சுவி. லுத்தரன் திருச்சபையின் நாலாம் பொதுக்கூட்டம் தரங்கையில் கூடிவரும். நமது சபைகளின் உள்ளும் புறம்புமான அபிவிர்த்திக்கு உதவும் பல சங்கதிகள் அதில் பேசப்படும். இக்கூட்டத்தால் நலம் பிறக்கும்படி நமது சபையார் கர்த்தரை நோக்கி செபிப்பது அவசியம்.

---

டில்லி சக்கரவர்த்திகளில் ஒருவன் தன் மனைவிக்குக் கட்டின அழகிய கல்லறை ஒன்றின்மேல் பதித்திருக்கும் பின்வரும் வாசகங்கள் கவனிக்கப்படத்தக்கவை: பூலோகம் ஒரு பாலம்; அதைக் கடந்து போ, ஆனால் அதன்மேல் கட்டடம் கட்டாதே. பூலோகம் ஒரு நாழிகை; அதன் நிமிஷங்களைச் செபத்திற் போக்கு, மற்றது நமக்கு மறைவு.

---

பெந்தெக்கொஸ்தே பண்டிகை பெரிய மிசியோன் பண்டிகை. அந்த நாளில் திருச்சபை தன் ஜெனனத்தை நினைத்துச் சந்தோஷப்படுகிறது. அந்த நாளில் ஒவ்வொரு கிறிஸ்தவனும் தான் திருச்சபையில் பெற்றனுபவிக்கும் பெரிய நன்மைகளை நினைத்துக் களிகூருகிறான். அந்த நாளில் திருச்சபைக்குப் புறம்பே நிற்கும் ஏழை அஞ்ஞானிகளை நினைத்து அவர்களுக்காக செபஞ் செய்வது எல்லாக் கிறிஸ்தவர்களின் கடமையுமாம்.

---

வேதத்தை வியாக்கியானஞ் செய்வோர் மூவகைப்படுவர்: (க.) பாரம்பரைக்கு ஏற்றபடி திருச்சபை பிதாக்கள், பொதுச் சங்கங்கள் செய்த விஸ்தரிப்பின் படியே வியாக்கியானம் செய்வோர். இவர்களை மனிதருக்கு அடிமைகள் என்னலாம். (உ.) சாஸ்திர சம்பிரதாயங்களுக்கும், உலக நியாயங்களுக்கும் ஏற்றபடி வியாக்கியானப்படுத்துவோர். இவர்கள் சுய புத்திக்கு அடிமைகள். (ங.) வேதத்தை வேதத்தால் வியாக்கியானம் செய்வோர். இவர்கள் விளங்காத ஒரு வாக்கியத்தை விளங்குகிற மற்ற வாக்கியங்களோடு ஒத்துப்பார்த்து, பரிசுத்த ஆவியானவர் அதற்குச் சொல்லும் அர்த்தத்தைத் தேடுவதால், இவர்கள் தேடினதைக் கண்டுபிடிக்கும் பராபரனுடைய பிள்ளைகளாம்.

# 1895-ம் ஷூ கடைசியில் நமது மிசியோன்

| சேகரங்கள். | ஆண் பெண் கிராமபாட. | ஆண் பெண் உயர். பாட. | ஆண் மிடில் ஸ்கூல். | ஆண் ஹைஸ்கூல். | செமினேரி. | பெண் தாழ். கிரா. பாட. | பெண் உயர். கிரா. பாட. | பெண் மிடில் ஸ்கூல். | ஆண் ஆசரிப்பு பாட. | பெண் ஆசரிப்பு பாட. | ரிசல்ட் பாட சாலை. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| தரங்கை, சென்றிரல் பாடசாலை ... | ... | 1 | 1 | 1 | ... | ... | ... | ... | 1 | ... | 3 |
| ,, சபை ... ... ... | 2 | ... | ... | ... | ... | ... | 1 | ... | ... | ... | 3 |
| காரைக்கால்... ... ... ... | 2 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| பிறையாறு, செமினேரி ... ... | ... | ... | ... | ... | 1 | ... | ... | ... | 1 | ... | 1 |
| ,, அப்பியாச பாடசாலை ... | ... | 1 | ... | ... | ... | ... | ... | ... | 1 | ... | 1 |
| ,, தொழிற் பாடசாலை ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | 1 | ... | ... |
| ,, சபை .. ... ... | 7 | ... | ... | ... | ... | ... | 1 | 1 | ... | ... | 8 |
| மணிக்கிராமம் ... ... ... | 6 | 1 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | 7 |
| மாயபுரம் ... ... ... ... | 15 | ... | ... | ... | ... | ... | 1 | ... | ... | 1 | 5 |
| சீர்காழி ... ... ... ... | 10 | 1 | 1 | 1 | ... | ... | ... | ... | ... | ... | 5 |
| மணல்மேடு ... ...... ... | 4 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| கும்பகோணம் ... ... ... | 10 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| நாகப்பட்டணம் ... ... ... | 1 | 1 | ... | ... | ... | ... | 1 | ... | ... | ... | 3 |
| திருவாரூர் ... ... ... ... | 2 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| தஞ்சாவூர் ... ... ... ... | 10 | 2 | 1 | ... | ... | ... | 1 | 1 | 1 | 1 | 11 |
| அணைக்காடு ... ... ... ... | ... | 2 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | 2 |
| திருச்சினப்பள்ளி ... ... .. | 2 | 1 | ... | ... | ... | ... | 1 | ... | 1 | 1 | 4 |
| மேட்டுப்பட்டி ... ... ... | 3 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | 3 |
| புதுக்கோட்டை ... ... ... | 4 | 4 | 1 | ... | ... | ... | ... | ... | ... | ... | 4 |
| மதுரை ... ... ... ... | 9 | 3 | ... | ... | ... | ... | 1 | ... | ... | 1 | 9 |
| திண்டுக்கல் ... ... ... ... | 6 | 2 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | 7 |
| கோயமுத்தூர் உள்ளூர் ... ... | 1 | 1 | ... | ... | ... | ... | ... | ... | 1 | ... | 2 |
| ,, சேகரம் ... ... ... | 4 | 2 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | 4 |
| ஈரோடு ... ... ... ... | ... | 1 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | 1 |
| ஏற்காடு ... ... ... ... | 1 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| பெங்களூர் ... ... ... ... | 1 | 1 | ... | ... | ... | ... | ... | ... | 1 | 1 | 1 |
| சென்னை, புரசபாக்கம் ... ... | ... | 2 | 1 | ... | ... | ... | 1 | 1 | 1 | ... | 5 |
| ,, ராயபுரம் ... ... ... | ... | 1 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | 1 |
| ,, சேகரம்' ... ... ... | 11 | 1 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | 5 |
| செங்கல்பட்டு ... ... ... | 5 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | 3 |
| விழுப்புரம் ... ... ... ... | 4 | 3 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | 6 |
| பண்ணுருட்டி ... ... ... | 2 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| கூடலூர் ... ... ... ... | 6 | 1 | ... | ... | ... | ... | ... | ... | 1 | ... | 3 |
| விருத்தாசலம் ... ... ... | 1 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| தென்னூர் ஐயம்பேட்டை ... ... | 3 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | 1 |
| சிதம்பரம் ... ... ... ... | 9 | 1 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | 2 |
| இரங்கூன் ... ... ... ... | 1 | 2 | 1 | ... | ... | ... | ... | ... | ... | ... | 4 |
| | 142 | 35 | 6 | 2 | 1 | ... | 8 | 3 | 9 | 5 | 114 |



# பாடசாலைகள் இருந்த நிலைமை.

| சேகரங்கள். | உபாத்தியாயர். | உபாத்தியாயினிமார். | மாணாக்கர். | | | | மாணாக்கிகள். | | | | பள்ளிக்கூட சம்பளவரவு. | | | சர்க்கார் ரிசல்ட் கிராண்டு வரவு. | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | நமது சபை. | இதர சபை. | அக்கியான. | மொத்தம். | நமது சபை. | இதர சபை. | அக்கியான. | மொத்தம். | ரூபாய். | அணா. | பை. | ரூபாய். | அணா. | பை. |
| தரங்கை, சென்றிரல் பாடசாலை | 16 | ... | 141 | 10 | 50 | 201 | ... | ... | ... | ... | 615 | 11 | 6 | 1017 | 14 | 4 |
| ,, சபை | 3 | 3 | 17 | 1 | 6 | 24 | 34 | 2 | 32 | 68 | ... | ... | ... | 136 | 5 | ... |
| காரைக்கால் | 2 | ... | 2 | ... | 13 | 15 | 9 | 2 | 10 | 21 | ... | ... | ... | ... | ... | ... |
| பிறையாறு, செமினேரி | 6 | ... | 47 | 1 | ... | 48 | ... | ... | ... | ... | ... | ... | ... | 778 | ... | ... |
| ,, அப்பியாச பாடசாலை | 1 | ... | 68 | 2 | 2 | 72 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| ,, தொழிற் பாடசாலை | ... | ... | 26 | ... | ... | 26 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| ,, சபை | 10 | 7 | 45 | 1 | 17 | 63 | 104 | ... | 46 | 150 | 9 | ... | ... | 512 | 3 | ... |
| மணிக்கிராமம் | 7 | ... | 28 | 2 | 56 | 86 | 27 | 1 | ... | 28 | 1 | 7 | ... | 39 | 2 | ... |
| மாயபுரம் | 15 | 4 | 74 | 12 | 118 | 204 | 113 | ... | 1 | 114 | ... | ... | ... | 234 | 8 | ... |
| சீர்காழி | 29 | ... | 78 | 6 | 291 | 375 | 38 | ... | 6 | 44 | 2788 | ... | ... | 1063 | 10 | 4 |
| மணல்மேடு | 4 | ... | 19 | 8 | 26 | 53 | 9 | ... | ... | 9 | 5 | 14 | ... | ... | ... | ... |
| கும்பகோணம் | 10 | ... | 36 | 9 | 23 | 68 | 28 | ... | 1 | 29 | ... | ... | ... | ... | ... | ... |
| நாகப்பட்டணம் | 3 | 2 | 13 | 26 | 18 | 57 | 9 | 7 | 13 | 29 | 6 | ... | ... | 19 | 8 | ... |
| திருவாரூர் | 2 | ... | 4 | 2 | 5 | 11 | 6 | ... | ... | 6 | ... | ... | ... | ... | ... | ... |
| தஞ்சாவூர் | 28 | 5 | 161 | 52 | 176 | 389 | 112 | 10 | 12 | 134 | 222 | 10 | ... | 1609 | 2 | 4 |
| அணைக்காடு | 7 | ... | 18 | 16 | 76 | 110 | 11 | ... | ... | 11 | 46 | 4 | ... | 186 | 7 | ... |
| திருச்சினப்பள்ளி | 8 | 4 | 50 | 16 | 80 | 146 | 25 | 5 | 76 | 106 | 108 | 5 | 6 | 453 | 11 | ... |
| மேட்டுப்பட்டி | 3 | ... | 26 | 18 | 17 | 61 | 19 | ... | 1 | 20 | 1 | ... | ... | ... | ... | ... |
| புதுக்கோட்டை | 16 | ... | 28 | 29 | 233 | 290 | 9 | 1 | 4 | 14 | 441 | 13 | ... | 121 | 12 | ... |
| மதுரை | 13 | 4 | 66 | 2 | 146 | 214 | 39 | ... | 1 | 40 | 3 | 5 | 9 | 299 | 1 | ... |
| திண்டுக்கல் | 14 | 3 | 23 | 14 | 232 | 269 | 5 | 4 | 14 | 23 | 253 | 9 | 9 | 244 | 7 | ... |
| கோயமுத்தூர் உள்ளூர் | 3 | 1 | 8 | 1 | 42 | 51 | 13 | ... | 3 | 16 | 5 | 10 | ... | 149 | ... | ... |
| ,, சேகரம் | 11 | 2 | 9 | 15 | 177 | 201 | 9 | 4 | 21 | 34 | 112 | 3 | 4 | 192 | 5 | ... |
| ஈரோடு | 3 | 1 | 1 | 2 | 55 | 58 | ... | ... | 5 | 5 | 67 | 2 | 6 | 67 | 15 | ... |
| ஏற்காடு | ... | ... | 4 | ... | ... | 4 | 5 | ... | ... | 5 | ... | ... | ... | ... | ... | ... |
| பெங்களூர் | 5 | ... | 27 | 8 | 41 | 76 | 16 | 1 | 14 | 31 | 27 | 5 | 3 | 28 | ... | ... |
| சென்னை, புரசபாக்கம் | 21 | 8 | 86 | 31 | 287 | 404 | 63 | 23 | 42 | 128 | 1465 | 11 | ... | 944 | 13 | ... |
| ,, ராயபுரம் | 4 | 1 | 13 | 6 | 40 | 59 | 9 | 7 | 9 | 25 | 60 | 7 | ... | ... | ... | ... |
| ,, சேகரம்' | 8 | ... | 126 | 1 | 74 | 201 | 65 | ... | 12 | 77 | 8 | ... | ... | 40 | 4 | ... |
| செங்கல்பட்டு | 5 | ... | 16 | 1 | 27 | 44 | 19 | ... | ... | 19 | ... | ... | ... | ... | ... | ... |
| விழுப்புரம் | 8 | ... | 40 | 22 | 35 | 97 | 28 | 2 | 9 | 39 | 4 | 9 | 9 | 75 | 1 | ... |
| பண்ணுருட்டி | 2 | ... | 12 | 10 | 2 | 24 | 7 | 2 | ... | 9 | ... | ... | ... | ... | ... | ... |
| கூடலூர் | 9 | 1 | 39 | 2 | 37 | 78 | 34 | 2 | 7 | 43 | 13 | 11 | 6 | 250 | 8 | ... |
| விருத்தாசலம் | 3 | ... | 2 | ... | ... | 2 | 4 | ... | ... | 4 | ... | ... | ... | ... | ... | ... |
| தென்னூர் ஐயம்பேட்டை | 1 | 1 | 21 | 7 | 8 | 36 | 10 | 1 | ... | 11 | 1 | 10 | 6 | 17 | ... | ... |
| சிதம்பரம் | 16 | ... | 44 | 8 | 94 | 146 | 23 | ... | 1 | 24 | ... | ... | ... | 83 | ... | ... |
| இரங்கூன் | 10 | ... | 5 | 17 | 157 | 179 | 8 | 5 | 4 | 17 | 2224 | 8 | ... | 565 | 8 | ... |
| | 306 | 47 | 1423 | 358 | 2661 | 4442 | 910 | 79 | 344 | 1333 | 8493 | 15 | 4 | 9129 | 1 | ... |

### ௰௨. வேத வாசிப்பு.

நல்லொழுக்கத்துக்கு வாசிப்பு முக்கியமென்று முன் சொன்னேன். வாசிப்பிலெல்லாம் முக்கியவாசிப்பு வேத வாசிப்பு. ஆயினும் அதைப்போல் அசட்டைபண்ணப்பட்டது வேறொன்றுமில்லே. காலே மாலே வேதம் வாசி என்று இக்கால வாலிபருக்குச் சொன்னேமாகில், அவர்கள் நம்மை எடுத்தெறிந்து பேசி: வேத வாசிப்பு கவைக்குதவுமா, அது சோற்றுக்காகுமா கறிக்காகுமா, அது காசாகுமா பணமாகுமா, அதனால் பீயே (B. A.) ஆகலாமா எம்மே (M. A.) ஆகலாமா, வேத வாசிப்பு பாதிரிமாருக்கும் உபதேசிமாருக்குமுரியது என்று பலவாறாக அலப்புவர். வேத வாசிப்பு இல்லாமையால் உண்டாகும் நஷ்டம் இவ்வளவென்றில்லே. வேதம் என்ற பதத்திற்கு அறிவென்றர்த்தம். சத்திய வேத புத்தகம் சகல நல்லறிவுக்கும் ஊற்றாகையால் அதற்கு அப்பெயர் தகுதியே. வேதத்தை அலட்சியம் செய்வோரிடம் அறிவீனம் குடிகொள்ளும் என்பதற்கு ஐயமில்லே. அறிவீனம் எங்கேயோ அங்கே அசுத்தம். அசுத்தமுள்ள இடத்தில் ஒழுங்கேது, ஒழுக்கமேது.

என்போலிய எளியவர்க்கு வேத வாசிப்பிலும் முக்கியமானது ஒன்றுமில்லே. வேத வசனம் தேவ வசனம். தேவ வசனம் ஜீவவித்து. அது பசியுள்ளோர்க்குப் போசனம், தாகமுள்ளோர்க்குப் பானம், நோயாளிகட்கு ஔஷதம், கருகினகனிகொடுக்கும் கற்பக விருட்சம். அது சிறுவரை மகிழச்செய்யும் சிங்காரவனம், வாலிபரை மகிழ்ச்சியாக்கும் மாடமாளிகை, புருஷரைப் பூரிப்பிக்கும் புண்ணியக்ஷேத்திரம், விருத்தாப்பியர்க்கு மிருதுவான படுக்கை. வேத வசனம் தேவகிருபையைக் கூறும், தேவகிருபையை அளிக்கும், தேவகிருபையில் காக்கும். அது புகுந்தவிடத்தில் அசுத்தம் போக்கும், பரிசுத்தம் ஆக்கும். அது ஆளும் இடத்தில் மெய்வாழ்வு தழைக்கும், மேலான ஆசீர்வாதங்கள் நிலேக்கும்.

இது மெய்யோ பொய்யோவென்று தாவீதரசனைக்கேள், சாலொமோன் அரசனிடம் விசாரி. நான் சொன்னது உண்மையென்று கன்னிமரியாள் கட்டாயம் சொல்லுவாள், பவுலப்போஸ்தலன் பண்புடன் பகர்வார், தீமோத்தேயு சிறந்துமொழிவார். சாட்சிகளின் பெரிய மேகம் உன்னைத் தப்பாமல் சூழ்ந்துகொள்ளும்.

இப்படியிருக்க, வேதத்தை நேசிக்கவும், வேதாகமங்களை வாசிக்கவும் தடையென்ன. வேத புத்தகத்துக்கும் வேறு புத்த



கங்களுக்கும் உள்ள வித்தியாசம் பெரிதாகையால், வேத புத்தக வாசிப்பில் அனுசரிக்கவேண்டிய விதிகள் விசேஷித்தவை.

வேறு புத்தகங்களேப்போல் வேத புத்தகம் மனுஷ நூலல்ல. அது தெய்வநூல். ஆகையால் அதை விசேஷித்த வணக்கத்தோடு எடுத்து வாசி. அதில் உன்னேடு பேசுகிறவர் ஆர் என்றும், அவர் பேசக்கேட்கிற நீ யாரென்றும் அறிந்து, உத்தம மனத்தாழ்மையை அணிந்துகொள். மேட்டிமையான சிந்தை வேத வாசிப்புக்கு அடாது. அருள்வேத புத்தகம் தாழ்மையுள்ள ஆடு நடந்து செல்லும் தடாகம், அகந்தையுள்ள யானை தத்தளித்துக் கலங்கும் சமுத்திரம். ஆகையால், தேவ ஒத்தாசையைத் தேடும் செபத்தோடு வாசி. வேதத்தை எழுதிக் கொடுத்தவரையன்றி, வேதத்தைப் போதித்து விளக்கக் கூடியதார். பரிசுத்த ஆவியின் வெளிச்சமின்றி, பரிசுத்த எழுத்துக்கள் விளங்கா. ஆண்டவரே, என் கண்களே வெளிச்சமாக்குமென்று அத்தியந்த பணிவாய் அமலனை வேண்டு. ஆண்டவர் திறக்காத கண்களுக்கு அருள்வேதம் 'மறை'. அவர் திறக்கும் கண்களுக்கே அது 'வேதம்'. விளங்காத ஒரு வாக்கியம் விளங்கும் ஒரு வாக்கியத்தால் தெளிவாகும். வேத புத்தகம் தெளிவான பளிங்கு. அதில் உன் பாவநிலேமையைப் பார்த்துக் கண்ணீர் விடு, உன் இரட்சகரைப் பார்த்து ஆறுதலடை. அதைக் கவனிப்பாய் வாசித்தால், அது உன் மனதைக் குத்தி வாதிக்கும், வதைந்த மனதின் புண்ணையாற்றும். மனதை ஆற்றும் வாக்கியங்களை மனப்பாடம் பண்ணு. இவ்வாக்கியங்கள் வாலிபத்தில் உன் வழிகாட்டியும், வார்த்தகத்தில் உன் ஊன்றுகோலுமாம். அது உன் சங்கடத்தில் மந்திரியும், உன் சஞ்சலத்தில் தோழனுமாயிருக்கும்.

இயேசுவின் தாய் தான் கேட்டதை இருதயத்தில் வைத்தாள். நீயும் வாசித்த வசனத்தை இருதயத்தில் வை. ஞாபகத்தில் வைப்பது நல்லது, இருதயத்தில் வைப்பதோ அதிலும் நல்லது. தங்கமணிக்கோர்வைக்கு கழுத்தே தரும் இடம், தங்கக் காப்புக்குக் கரமே தரும் இடம், இயேசுவின் வாக்குக்கோ இருதயமே ஏற்றது. நீ இருதயத்தில் வைத்ததை இன்பமுடன் தியானி. தியானிக்கத் தியானிக்க வசனம் வேர் கொள்ளும். வேர் கொள்ள வேர் கொள்ள, விசாலமாய்த் தழைத்து, விநோதமாய்ப் பூப்பூத்து, வெகு நல்ல கனிதரும்.

தேவ திருவசனத்தைத் தினந்தோறும் வாசி. காலேயில் கண்விழித்தவுடன் அதை வாசி, இரவில் கண்மூடுமுன் அதை வாசி. நீ மகிழும் நாளில் அதைப்பார், நீ அழும் நாளிலும் அதையே பார். விருந்தும் மருந்தும் மூன்று நாள் என்றபடி வேத வசனத்தை மூன்று நாள் வாசித்துவிட்டு, நாலாம் நாளில் தவறிப்

போகாதே. எந்தவேலையிருந்தாலும், எவ்வளவு தொல்லை சூழ்ந்தாலும், வேத வாசிப்பை நிறுத்தாதே. எந்த வாசிப்பிலும் இந்த வாசிப்பே இனிது, எந்த வேலையிலும் இந்த வேலையே இனிது.

உள்ளது சொல்வோன்.

---

## ஜர்மானிய லுத்தரன் சபையின் தர்ம கிரியைகள்.

### ௬. நோயாளிகள், ஊனர்கள் முதலியவர்களுக்கான ஏற்பாடுகள்.

குருடர்.— கண்தெரியாத கபோதிகளின் நிலைமை எத்திரத்தோரின் பச்சாத்தாபத்தையும் எழுப்பத் தக்கது. பூர்வ காலந்தொட்டுக் குருடருக்கு இரங்கி செய்யப்பட்ட ஏற்பாடுகள் அனேகம் உண்டு. ஆயினும் சமீபகாலத்தில்தான் அவர்களுக்குக் கல்விப்பயிற்சி செய்தலும் சாத்தியமென வெளிப்பட்டது. தற்காலம் கர்மானியாவில் ௬௰௫ குருடர் இருக்கிறார்கள். இவர்களுக்காக ஏற்பட்டிருக்கும் ௩௨ பாடசாலைகளில் ௨௫ அந்தக மாணுக்கர் படிக்கிறார்கள். இவர்களில் ஊனமடையாதிருக்கும் புலன்களை அப்பியாசித்து விர்த்திசெய்து அவர்கள் ஆத்ம சக்தியையும் அபிவிர்த்தியாக்குவதால் அவர்களைச் சுயபரிபாலனிகள் ஆக்குவதே மேற்கூறிய பாடசாலைகளின் இலக்கு. அவர்களுக்குச் சுவிசேஷத்தின் ஆறுதலும் ஆசீர்வாதமும் கிடைக்கும் பொருட்டு தடவி வாசிக்கும் புறப்பாட்டு அட்சரங்கள் உள்ள வேத புத்தகங்கள், வேத சரித்திரங்கள், ஞானப்பாட்டுகள், ஞானோபதேசங்கள், பக்திக்குரிய பலநூல்கள் பிரசுரமாக்கப்பட்டிருக்கின்றன. ஹம்புர்க் நகரத்தில் அந்தகருக்காக ஏற்பட்டிருக்கும் சுவிசேஷ சங்கத்தார் அவர்கள் வாசிப்பதற்காகப் பிரசுரிக்கும் ஒரு மாதாந்த அந்தக பத்திரிகையும் உண்டு. குருடருக்காக ஏற்பட்டிருக்கும் பள்ளிக்கூடங்களில் ௭ வயது முதல் ௰௬ வயதுக்குள்பட்ட குருட்டுப் பிள்ளைகளை ஏற்றுக்கொண்டு பத்திவிர்த்திக்கும் புத்திவிர்த்திக்கும் அடுத்த போதனைகள் செய்வித்து திருச்சபையின் நல் அவயவங்களாக்கும்படி பிரயாசப்படுகிறார்கள். கயிறு திரித்தல், கூடை பின்னுதல் முதலிய வேலைகளும், தச்சத்தொழில் முதலிய கைத்தொழில்களும்கூட அவர்களுக்குப் படிப்பிக்கப்படும். வாத்திய கியானமுள்ள குருடர் அனேகருண்டு. கண்தெரியாத சிறுவருக்காகவே ஏற்பட்டிருக்கும் ஒரு பாடசாலை ஸ்துத்கார்த் நகரத்திலிருக்கிறது.

செவிடுமையர்.— கர்மானியாவிலுள்ள ௬௰௯ செவிடுமையருக்காக அனேக பள்ளிக்கூடங்களும் பத்திரிகைகளும் ஏற்பட்டிருக்கின்றன. ஷ்லெஸ்விக், வினந்தன், விர்த்தன்பேர்க் பட்



டணங்களில் உள்ள பாடசாலைகள் முக்கியமானவை, [illegible]பாடசாலைகளில் ௭ வயது முதல் ௰௪ வயதுக்குட்பட்ட செவிடுமையரான பிள்ளைகள் பிரவேசித்து எழுதவும் வாசிக்கவும் கணக்குப் பார்க்கவும் படிக்கிறார்கள். அவர்கள் ஞானோபதேசத்தைக் கற்கவும், மெய்யான பராபரனைநோக்கி செபம்செய்து, அவருக்குப் பயந்து அவரைச் சிநேகிக்கவும் போதிக்கப்படுகிறார்கள். அவர்கள் கூடியமட்டும் பிறருக்குப் பாரமாயிராமல் தங்களைத் தாங்களே ஆதரித்துக்கொள்ளவும், சன்மார்க்கமாய் ஜீவனம் பண்ணவும் கற்றுக்கொள்ளுகிறார்கள். கர்மானியாவில் செவிடுமையருக்காக ஏற்பட்டிருக்கும் பள்ளிக்கூடங்கள் ௯௰. இவைகளில் படிக்கும் செவிடுமையரான மாணுக்கர் ௬௯௩௱௭௰. அங்கே போதிக்கும் உபாத்திமார் ௬௱௭௰௨.

சப்பாணிகள்.— ௧௮௩௨-ம் (௵) முதல் சப்பாணிகளுக்காக ஏற்பட்டிருக்கும் பாடசாலை ஒன்று மூனிக் நகரத்தில் உண்டு. அதில் ௬௰ ஆண் பிள்ளைகளும் ௩௰ பெண் பிள்ளைகளும் இருக்கிறார்கள். இதையன்றி கர்மானியாவின் நாலு திசைகளிலும் பல தர்மசாலைகள் ஏற்பட்டிருக்கின்றன. சப்பாணிகளை ஔஷதப் பிரயோகம், ஆயுதப் பிரயோகம், யந்திரப் பிரயோகம் முதலிய யத்தனங்களால் சுகசீருக்குக் கொண்டுவரப் பிரயாசப்படுவதுடன், அவர்கள் சரீர சப்பாணிகளாயினும் ஆத்ம சப்பாணிகளாய் இராதபடி தர்மவான்கள் முயற்சி செய்கிறார்கள். இம்முயற்சிகள் இல்லாவிடின் அனேக ஏழைகளின் சரீரமும் ஆத்துமமும் நிர்பாக்கியத்துக்குள்ளாய் இருக்கும். இடப்பேர்த்தியினாலும், சமுத்திர ஸ்நானத்தினாலும் சுகப்படுத்தும் பொருட்டு கடற்கரையோரங்களில் அனேக வைத்தியசாலைகள் ஏற்பட்டிருக்கின்றன. இவற்றால் நற்சுகத்துக்குவந்த அனேக பிள்ளைகள் உண்டு. ஏழைகளின் சரீர சுகத்தையும் ஆத்ம சுகத்தையும் கருதி ஏற்பட்டிருக்கும் வைத்திய சாலைகளைப்பற்றி விபரஞ்சொல்லில் பெருகும்.

பேதைகள், பைத்தியக்காரர்.— மூளைக் கெடுதியினாலாவது இயற்கையான வேறு முகாந்தரங்களினாலாவது அறிவற்ற பேதைகளாய்த் திரிவோர் பலருண்டு. இவர்களுக்காக ஏற்பட்டிருக்கும் தர்மசாலைகள் மூவகையாம். (க) ஒன்றுக்கும் உதவாத பேதைகளுக்கான தர்மசாலைகள். (உ) கொஞ்சம் படிக்கக் கூடியவர்களுக்கான தர்மசாலைகள். (ந) படித்து வெளியேறும் பேதைகளுக்கு வேலை கொடுப்பதற்கான தர்மசாலைகள். புத்திபலவீனப்பட்ட மேற்கூறிய பிள்ளைகளுக்காக கர்மானியாவில் ஏற்பட்டிருக்கும் ௬௰ தர்மசாலைகளில் ௯௲ பேதைகள் வசிக்கிறார்கள்.— உலகத்திலுள்ள உன்மத்தர்சாலைகளில் சிறந்தவை கர்மானியாவில் உண்டு. உன்மத்தர்களை உல்லாசப்ப

டுத்தி, ஆகாதவர்களுக்குக் கெடுதியான யாவுக்கும் அவர்களை விலக்கிக் காக்கும்பொருட்டு ஏற்பட்டிருக்கும் இத்தர்மசாலைகளில் தக்க ஆகாரமும், சுக அப்பியாசங்களும், நல்வேலைகளும் கொடுத்து உதவிசெய்யும்படி தியாக்கோனிகள் என்ற பக்தியுள்ள இஸ்திரிகள் பலர் ஏற்பட்டிருக்கிறார்கள். கர்மானிய வுத்தரன் சபைதான் ஏற்படுத்தும் எல்லா தர்மவேலைகளிலும் கிருபையின் எத்தனங்களை முக்கியப்படுத்துவதுபோல் உன்மத்தர் சாலைகளிலும் செய்துவருகிறது.

கர்மானிய கிறிஸ்தவர்கள் தங்கள் தேசத்தில் நடக்கும் தர்மகிரியைகளுக்காக வருஷவாரி கொடுக்கும் நன்கொடைகள் எண்பதுலட்சம் ரூபாய். இதையல்லாமல் புறத்தேசங்களில் நடக்கும் மிசியோன் கிரியைகளுக்காக சற்றேறக்குறைய இருபது லட்சம் ரூபாய் செலவிடுகிறார்கள்.

## இராயநாயக்கன்.

பராபரன் தமது திருச்சித்தத்தை நிறைவேற்றுதற்கு மனிதரால் அற்பமாய் எண்ணப்படும் எத்தனங்களைக் கையாடுகிறார். இதற்கு மிசியோன் சரித்திரங்களில் அநேக திருஷ்டாந்தங்களைக் காணலாம். அவற்றுள் ஒன்று இராயநாயக்கனின் சரிதை. இவன் சாதியில் பறையன். தஞ்சாவூர் அரசனின் பட்டாளத்தில் வேலை செய்ததால் அவனுக்கு நாயக்கன்பட்டம். உலக மக்களால் நீசன் என்னப்பட்ட இவனைக்கொண்டு பரமராசன் தஞ்சை சமஸ்தானத்துக்குத் தமது திருச் சுவிசேஷத்தைக் கொண்டுபோகச் சித்தமானார். எப்படியெனில், ரோமான் கத்தோலிக்கனைப் பிறந்து வளர்ந்த இந்த இராயநாயக்கனுக்கு வாசிப்பில் அதிகப்பிரியம். போன நூற்றாண்டில் காகிதப்புத்தகங்கள் அதிகமாய் அகப்படாததாகையால் அவன் ஓலைச் சுவடிகளில் உபதேசிகள் எழுதிக்கொடுத்த அர்ச்சியசிஷ்டர்களுடைய கதைகளை ஆனந்தத்துடன் வாசித்து வருவான். அவன் ஒருமுறை இயேசுநாதரையும் அவருடைய திருப்பாடுகள் மரணத்தையும் பற்றிய சரித்திரத்தை வாசித்தபொழுது அவன் மனசு பற்றி எரிந்ததால் அதிகமாய் அவரைக்குறித்து வாசிக்க விரும்பினான். அவனுடைய ஆசையோ நெடுநாளாகத் தீரவில்லை. இப்படியிருக்க ஒரு நாள் ஒருரோமான் பிச்சைக்காரன் முகப்பேடு இல்லாத ஒரு சிறு புத்தகத்தை அவனுக்குக் கொண்டுவந்து கொடுத்தான். நாலு சுவிசேஷங்களும் அப்போஸ்தலருடைய நடபடிகளும் அடங்கிய இப்புத்தகத்தைத் தரங்கன்பாடியிலிருந்த பென்யமீன் சூல்ச்சே ஐயர் அந்தப் பிச்சைக்காரனுக்குக் கொடுக்க, அவன்



தன் குருக்களின் கொடுமைக்குப் பயந்து முகப்பேட்டைக் கிழித்தெறிந்து விட்டான். அந்தப் பிச்சைக்காரன் அந்தப் புத்தகத்தைச் சுவாமியார் பார்க்காமல் அந்தரங்கத்தில் வாசிக்கும்படி இராயநாயக்கனுக்குக் கொடுத்தான். இராயநாயக்கன் அதை மிகுந்த சந்தோஷத்தோடு வாசித்து, அது தன்னை விட்டு எடுபட்டுபோம் என்கிற பயத்தினால் அதை ஓலையில் பிரதி பண்ணத்தொடங்கினான். அப்புத்தகத்தைத் தான் இழந்துபோகிறதில்லை என்கிற நிச்சயம் வருமளவும் அவன் ஓலையில் எழுதியது மத்தேயு, மாற்கு சுவிசேஷங்கள். அவன் பின்னால் தெரிவித்தபடி அவன் வாசித்த வாக்கியங்கள் அவனுடைய விசுவாச தீபத்துக்கு எண்ணெய் ஆயிற்று. அதுமுதல் அவன் தரங்கன்பாடியிலிருந்து வேறு பல சிறு சிறு புத்தகங்களைப் பெற்று வாசித்து, கடைசியாகத் தானே தரங்கன்பாடி ஐயர்மாரிடம் போய்ச் சேர்ந்தான். அவன் அங்கே போகும்பொழுது தனிமையாகப் போகாமல், ஐயர்மாரிடத்தில் ஞானோபதேசம் படித்து ஞானஸ்நானம் பெறும்படி வேறு இரண்டு சிப்பாய்களை அழைத்துக்கொண்டு போனான். அவன் இரட்சகரைப் பற்றிய மெய்யறிவுக்கு வந்தவுடன் தன்னுடைய விசுவாசத்தை மறைத்து வைக்காமல் இரட்சிப்பும் ஜீவனும், சமாதானமும் சந்தோஷமும் ஊறிவரும் உன்னத ஊற்றாகிய இயேசு இரட்சகரை யாவருக்கும் பிரசங்கிக்கக் கருதினான். கிறிஸ்துவின் சீஷனாக வெளிப்பட்ட இவனுக்கு கிறிஸ்துவின் சீஷருக்குரிய பலனே கிடைத்தது. அதென்னவெனில் உலகத்தின் பகையும் விரோதமுமே. ரோமான் சபையார் அவனுடைய நற்போதனையின் நற்பலன்களைக் கண்ணாரக்கண்டும், மத வைராக்கியத்தினால் அவனை விரோதித்துத் துன்பப்படுத்தினார்கள். அவனோ தெய்வ கிருபையில் சந்தோஷமாகத்தரித்திருந்து, தஞ்சாவூர் அரசனின் சேவகத்தை விட்டுப் பரம இராசாவின் சேவகத்துக்குட்பட்டு, சுவிசேஷ சபையின் உபதேசியாகி சயு வருஷக்காலம் உண்மையாய் உழைத்தான். கூஎக-ம் ௵ அவன் ஸ்தேவானைப்போல்: கர்த்தராகிய இயேசுவே என் ஆவியை ஏற்றுக்கொள்ளும் என்று சொல்லி கர்த்தருக்குள் நித்திரையடைந்து, தன் பரம எசமானின் சந்தோஷத்துக்குள் பிரவேசித்தான்.

## இனிய சரிதைகள்.

### ௨. ஒரு சொப்பனம்.

நியூ இங்கிலாந்து நாட்டின் அழகிய நகரமொன்றில் நாணயத்திற்கும் திடசித்தத்திற்கும் பெயர்போன ஒரு மனு

ஷன் இருந்தான். அவன் அயலார் எல்லாரும் அவனை வெகுவாய் மதித்தார்கள். அவனோடு பழக்கமாகும் எவனும் அவனைக் கனப்படுத்தாதிரான். கையிறுகல் ஒன்றேயன்றி அவன்பேரில் கூறக்கூடிய வேறு குற்றங்கள் தெரியாது. ஆயினும் அவன் பிறருக்குக் கொடுக்கவேண்டியதைக் கொடுத்து எல்லா நடவடிக்கையிலும் நியாயஸ்தனாயிருந்தான் என்று யாவரும் அவனைக் குறித்து சாட்சி பகர்ந்தார்கள். யாராவது இவனை மோட்சத்தின் திடநம்பிக்கைக்கு ஆதாரமென்னவென்று கேட்டால், அவன்: நான் நாணயஸ்தன், நான் ஒருவனுக்கும் ஒன்றும் கடன் பட்டிருக்கிறதில்லை என்பான். அவன் வயதுதளர்ந்து கோனூன்றும் கிழவனான காலத்தில் ஓர் இரவு ஒரு விசேஷித்த சொப்பனத்தைக் கண்டான். அச்சொப்பனத்தில் அவன் மரித்தபின் ஒரு விசித்திரமாளிகையின் பெரிய சபாமண்டபத்திற்குப் போகும் வாசற்படியில் நின்றதாகவும் கதவுமூடியிருந்த அவ்வாசலுக்குமேல்: தான் ஒருவருக்கும் ஒன்றும் கடன்பட்டிருப்பதில்லை என்று ரூபிக்கும் எவனும் இவ்வாசல்வழியாய் மோட்சத்துக்குள் பிரவேசிக்கலாமென்று பெரிய எழுத்தாய் எழுதியிருந்ததாகவும் கண்டான். அதை அவன் பார்த்தவுடனே: இது எனக்கேற்ற நிபந்தனையே, நான் எவனுக்காவது ஒரே காசு கடன்பட்டிருக்கிறேன் என்று ரூபிக்கக்கூடியவன் யார்; ஆகையால் நான் மோட்சத்துக்குப் போவது நிச்சயம் என்றான்.

இதற்குப்பின் சொப்பனத்தில் நடந்ததைக்குறித்து அந்த மனுஷன் சொல்லுவது யாதெனில்: நான் மேற்கூறிய வாக்கியத்தை வாசித்தவுடனே எனக்கு எதிரிலிருந்த மண்டபத்துக்குள் சனசந்தடி உண்டாயிற்று. அதன் கதவு திடீரெனத் திறந்தது. அப்பொழுது மெலிந்த தேகமும் வெளிறின முகமுமுள்ள ஒரு மனுஷன் என்னிடம் வந்து: நீர் எனக்குக் கொடுக்கவேண்டிய கடனை உமக்கு நினைப்பூட்ட நான் வந்தேனென்று எனக்குச் சொன்னான். அதற்கு நான்: அதெப்படி அப்பா, நான் உன்னை அறியேனே, உன்னை நான் ஒருபோதும் கண்டதும் இல்லையே, உனக்கு நான் கடன்காரனானது எப்படி என்க, அவன் என்னைக் கவனத்தோடு உற்றுப்பார்த்து: ஐயா, இருபது வருஷங்களுக்கு முன் கொடிய காங்கையுள்ள ஒரு நாள் நீர் உமது குதிரைவண்டியில் ஏறி நகரப்பிரவேசம் செய்கையில் ஒரு எளிய மனுஷன் நோயால் வதைந்து நடையால் களைத்து ரஸ்தாவின் ஓரத்தில் படுத்துக்கிடந்தது உமது ஞாபகத்திலிருக்கலாம். நகர வைத்திய சாலைக்குப்போக விரும்பிய அந்த நோயாளி நடக்கமாட்டாமல் உமது புறமாய் கையை நீட்டி உரக்கக் கூப்பிட்டுத் தன்னை வண்டியில் ஏற்றிக்கொண்டு போகும்படி கேட்டுக்கொண்டான்.



நீரோ அவன் விண்ணப்பத்துக்கு இரங்காமல் குதிரைகளை வெருட்டிக்கொண்டு போய்விட்டீர். அந்த ஏழை அடியேன் தான். ஒரு வண்டி ஏற்றம் நீர் எனக்குப் பட்ட கடன். அது இவ்வுலகப் பிரமாணங்களின்படி அல்ல, வானராச்சியத்தின் பிரமாணங்களின்படியே நீர் எனக்குப்பட்ட கடனும். இதுவோ பராபரனுடைய கணக்கில் உமக்கு விரோதமாகப் பதிவாகியிருக்கிறது என்றான்.

இச்சமயம் என் இருதயத்தில் ஒரு ஒளிவீச துவக்கிற்று. நான் என் இறந்தகால சீவியத்தைப் பரிசோதித்துப்பார்க்க ஆரம்பித்தேன். நான் மேற்சொன்ன கடன்காரனுக்கு உத்தரம்சொல்வதற்குள்ளாக வேறொரு மனுஷனைக் கண்டேன். என் முந்தின அயலாரில் ஒருவனாகிய அவன் என்னிடம் வந்துநின்று: நீர் எனக்குப் பட்ட கடனை உமக்கு நினைப்பூட்ட வந்தேன் என்றான். நானோ: நான் உனக்கு ஒன்றும் கொடுக்கவேண்டியதில்லை, உனக்கும் எனக்குமிருந்த கணக்கைச் சரிவர நான் ஒழித்துவிட்டதில்லையோ என்றேன். அதற்கு அவன்: நான் சில வருஷங்களுக்கு முன் உமக்கு ஒரு பசுமாட்டை விற்ற ஞாபகமிருக்குதோ என்று கேட்க, நான்: நல்ல ஞாபகம் இருக்கிறது, நான் தீர்த்துக் கொண்ட கிரயத்தைச் சரிவரச் செலுத்திவிட்டேனே என்க, அவன்: குளிர்கால கொடுமையோடு நோய்க்கொடுமையும் கூடிக்கொள்ளவே, நானும் என் பெண்சாதி பிள்ளைகளும் கஞ்சிக்கு வழியற்று, கவலைமேலிட்டுப் பசிபொறுக்கமாட்டாமல், எங்கள் பசுமாட்டை விற்கநேரிட்டது. நீரோ எங்கள் ஆபத்தை உமக்கு ஆதாயமாக்கிக்கொண்டு, அதை ஈனக்கிரயத்துக்கு எடுத்துக்கொண்டீர். அதன் சரியான கிரயத்தில் நீர் கொடுத்ததுபோக பாக்கி நீர் எனக்குப்பட்ட கடன் என்று தெய்வ கணக்கில் பதிவாகியிருக்கிறது என்றான்.

இதைக் கேட்டவுடனே என் மனம் நொந்தது, என் மனச்சாட்சி என்னைக் குத்திற்று. சபாமண்டபத்தினின்று திரள் திரளான கடன்காரர் வந்து என்னை மொய்த்துக்கொண்டார்கள். அவர்கள் சொன்னதெல்லாம் உண்மை. அவர்களுக்கு நான் பட்ட கடனைச் செலுத்தித் தீர்ப்பது அசாத்தியம் என்று கண்டேன். அதனால் நான் மனம் வேசாறி வெட்கமும் துக்கமும் நிறைந்தவனாய் என் மார்பில் அடித்துக்கொண்டு: என் பராபரனே நான் என் கடனைச்செலுத்தி தீர்க்கக் கூடாதவன், நான் தப்பிப் பிழைக்க வழி இல்லையோ. இரக்கமுள்ள கர்த்தாவே என் எல்லா கடன்களுக்கும் நான் நீங்கலாவது எப்படியென்று எனக்குக் காட்டியருளும் என்று கூப்பிட்டேன்.

இவ்வாறு நான் செபம் செய்கையில் முன்னமே நான் கண்ட வாசகம் மறைந்துபோய், மற்றொரு வாசகம் தங்கமய

மாய்ப் பிரகாசித்தது. அது யாதெனில்: பராபரனுடைய குமாரனுகிய இயேசு கிறிஸ்துவின் இரத்தம் நம்மை எல்லாப் பாவமும் நீங்கச் சுத்திகரிக்கிறது என்பதே. இதைக் கண்டவுடன் நான் ஆனந்த பரவசமாகி: இதுவே எனக்குத் தேவை, இதுவே எனக்கு உதவி புரியும், பராபரனுக்கு ஸ்தோத்திரம் என்றேன்.

நான் விழித்தெழுந்தபின் நான் நடக்கவேண்டிய வழியை அறிந்துகொண்டேன். நான் என்னைச் சோதித்துப் பார்த்து என் கடன்களைக் கண்டுபிடித்து, இயேசுவைப் பற்றும் விசுவாசத்தால் கிருபை பெற்று அவரைக் கொண்டு பிதாவினிடம் பிரவேசம் பெற்றேன் என்பதாம்.

---

## ௩. தேவ வசனத்தின் பலம்.

நல்ல வளர்ப்பில் வளர்க்கப்படாத ஓர் எளிய பையன் இருந்தான். பெற்றோராவது மற்றோராவது அவனை முன்னுக்குக் கொண்டுவரப் பிரயாசப் பட்டவர்களல்ல. அவனுடைய தாய்தகப்பன்மார் அவனைப் பள்ளிக்கூடத்துக்கு ஒழுங்காய் அனுப்பாமல், மாடு மேய்ப்பதற்காக அடிக்கடி அனுப்பிவந்தார்கள். ஆதலால், அவனுக்கு எழுதப் படிக்கத் தெரியாது. செபஞ் செய்வதற்கு அறிந்தவனுமல்ல. ஆயினும், அவனுடைய ஞாபகத்தில் ஒரே ஒரு வேதவாக்கியம் நன்றாய்ப் பதிந்திருந்தது. அதை அவன் ஓய்வுநாட் பள்ளிக்கூடத்தில் தன் குருவினால் கற்றுக்கொண்டான்.

அவன் பெரியவனாக, ஆக, துர்க்குணமும் துஷ்டத்தனமுமே அவனோடு வளர்ந்தது. மரமேறுவதும், குருவி பிடிப்பதும், குருவிக்கூட்டைக் கோலால் கலைப்பதும், அணில் குத்துவதும், காய்கனி திருடுவதுமே அவனுக்கு வேலை. இதனால் அவன் போக்கிலிகள் சகவாசம் பெற்று, நாளாவிர்த்தியில் கள்வர்கூட்டத் தலைவனானான். பலநாள் திருடன் ஒருநாள் அகப்படுவானென்றபடி அவன் ஒரு கொள்ளைச்சங்கதியில் அகப்பட்டு, அதிகாரிகளால் கைதியாக்கப்பட்டான். இதை அவன் பொருட்படுத்தவில்லை. விசாரணை முடிகையில் அவனுக்குக் கொலைத்தீர்ப்புப் போடப்பட்டது. அப்பொழுது அவன் மனச்சாட்சி விழித்துக்கொண்டு அவனை வாதிக்கத்துவக்கிற்று. அவன் ஆறுதலற்று, இரவுபகலாய் அங்கலாய்த்துப் புலம்பினான். அவன் நித்தியநரகமே தன்பங்கென்று எண்ணி, அவநம்பிக்கையில் அமிழ்ந்தத் துவக்கினான்.

இப்படியிருக்க, அவனை மேல்பார்வையிடும் சிறைச்சாலைக்காரன் அவனை வைத்திருந்த அறையின் பக்கமாய்ச் செல்லு



கையில் தன்னோடுவந்த ஒருவருக்கு: இதோ, இந்த அறையில் ஒரு பாவிப்பயல் இருக்கிறான், அவன் தன் சகபாடிகளுடன் கொலைத்தீர்ப்பு பெற்றான் என்று சொன்னான். இது அந்தக் கொலைபாதகன் காதில் விழவே, அவன் ஏற்கனவே படித்திருந்த வேதவாக்கியம் அவனுடைய ஞாபகத்தில் வந்தது. "பாவிகளை இரட்சிக்கக் கிறிஸ்து இயேசு உலகத்திலே வந்தார் என்கிறது உண்மையும் எல்லா அங்கிகரிப்புக்குப் பாத்திரமுமான வார்த்தை" என்பதே அவ்வாக்கியம். நான் பாவியா, நான் பாவியேயானால் இயேசுநாதர் என்னையும் இரட்சிக்கவந்தார் என்பதற்குச் சந்தேகமில்லை என்று அவன் தனக்குள்ளே சொல்லிக்கொண்டான். அவன் அதைக்குறித்து யோசிக்க யோசிக்க அவனுடைய இருதயம் கரைந்துருகத் துவக்கிற்று. அவன் உள்ளத்தில் இருள் நீங்கவும், அருள் ஓங்கவும் ஆரம்பித்தது. அப்பொழுது அவன் பாவிகளை இரட்சிக்க உலகத்தில்வந்த இயேசுவைக்குறித்து அதிகமாய்க் கேட்டறிய விரும்பி, குருவானவரை அழைப்பிக்கக் கேட்டுக்கொண்டான். குருவானவர் வந்து அவனுக்குப் புத்தி சொன்னார். அதை அவன் கருத்தும் கவனமுமாகக்கேட்டு, தன் பாவங்களுக்காக மெய்மனஸ்தாபப்பட்டு, கிறிஸ்து இயேசுவைப்பற்றும் விசுவாசத்தோடு மரிக்க ஆயத்தமாயிருந்தான். அவன் தன் குருவானவரிடத்தில் கேட்டுக்கொண்ட தயவு என்னவெனில், தான் தூக்குமரத்தின் படிகளில் ஏறுகையில் மேற்கூறிய வாக்கியத்தைத் தன் செவியில்படச் சொல்லவேண்டும் என்பதே.

இவனுடைய மனந்திரும்புதலைக்குறித்துத் தேசாதிபதி கேள்விப்பட்டார். இவரே அன்றொருநாள் சிறைச்சாலைக்காரனோடு பேசிக்கொண்டு, மேற்சொன்ன கொலைபாதகனை வைத்திருந்த கிடங்கின் புறமாய்ச் சென்றவர். அவர் அவனுடைய மனந்திரும்புதலுக்காக மிகவும் சந்தோஷப்பட்டு, அவன் கொலைத்தீர்ப்பை அவனுக்கு மன்னித்து, அவனுக்கு ஒரு ஜீவனத்தைக் கட்டளையிட்டார். இதில் அவன் உட்சீரும் புறச்சீரும் விர்த்தியானதால், அவன் ஒரு காணியாட்சிக்காரனாகி, தேவவாக்கின் அற்புதபலத்துக்கு அத்தாட்சிக்காரனாக நெடுநாள் வாழ்ந்து, முதிர்வயதுள்ளவனாய் கர்த்தருக்குள் நித்திரை அடைந்தான்.

---

## வயிரச் சன்னம்.

5. ஜீவன் கடல் நீருக்கு ஒப்பு. கடல் நீரானது உயரப் போனாலொழிய நல்ல ஜலமாகாது. அதுபோல ஜீவனும் உயரப் போனாலொழிய முற்றிலும் நல்லதாகாது.

6. மேகம் எவ்வளவுக்கு இருட்டாய்த் தோன்றுகிறதோ அவ்வளவுக்கு வானவில் சோதியாய் விளங்கும்.

7. அனேகத்தை அறைகுறையாய் அறிவதிலும் ஒன்றைப் பூரணமாய் அறிவது வாசி.

8. மெதுவான வார்த்தைகளையும் திருத்தமான ரூபகாரத்தையும் உபயோகி.

9. நல்மனமும் நற்குணமும் எங்கும் நன்மையே தரும்.

---

## வர்த்தமான சங்கிரகம்.

South Africa: — தென் ஆப்பிரிக்காவிலுள்ள நாட்டு ஜனங்களோடு அங்கிலேயர் சமர்புரிந்து பலரையும் அடக்கிக் கலகத்தை அமர்த்தி வருகிறார்கள். குழப்பம் மேலிடாதபடி சேனைகளைப் பலப்படுத்தி, யுத்தாயுத முஸ்திப்புகளைச் சாக்கிரதையாய் ஒழுங்கு பண்ணுகிறார்கள்.

Vienna: — ஜெர்மானிய சக்கரவர்த்தியாகிய உவில்லியம் என்பவர் ஔஸ்திரிய சக்கரவர்த்தியைச் சந்தித்து, ராச்சிய சம்பந்தமான விஷயங்களை சாங்கோபாங்கமாய்க் கலந்து பேசினதுமன்றி, இஷ்ட விஷயமான பல வேடிக்கை விநோதங்களும் கண்டு களித்துத் திரும்பினர். இந்த ராஜ பேட்டியால் ஐரோப்பாவுக்கு நன்மை உண்டு.

France: — யூஜினி என்னும் சக்கரவர்த்தினி தனக்குப் புத்திரன் பிறந்த நாளில் பிரான்சு தேசத்தில் ஜனனமான ஆண்பிள்ளைகளெல்லாருக்கும் தான் ஞானத் தாயாயிருப்பதாக விளம்பரப் படுத்தியிருக்கிறாள். அந்தத் தினத்தில் பிறந்தவர்கள் 3834 ஆண்மக்கள். இவர்கள் எல்லாருக்கும் மேற்படி சக்கரவர்த்தினி தன் மரணசாதனத்தில் திரவிய சகாயம் குறித்திருப்பதாகக் கேள்வி.

Quinine: — சுர முதலிய வியாதிகளுக்குக் கைகண்ட அவிழ்தமாகிய இந்த மருந்தை இந்தியா துரைத்தனத்தார் பிரஜைகளுக்குள் எங்கும் வியாபிக்கச் செய்யவேண்டுமென்று கருத்துக்கொண்டிருக்கிறார்கள். இத்தேசத்தின் மலைச்சார்புகளில் இந்த சுர நாயகி மரத்தைப் பயிராக்கி காடுகளாக வளர்த்து அதில் உற்பத்தியாகும் மருந்தை சிறு சிறு பொட்டணங்களாக்கி பல ஜில்லாக்களிலும் சொற்ப விலைக்குத் தபாலாபீசு உத்தியோகஸ்தர் மூலமாக விலைப்படுத்தி வருகிறார்கள். இதனால் ஜனங்களுக்கு மிகுந்த சுகமுண்டாகும் என்பதற்கு ஐயமில்லை.

Acheen: — டச்சுக்காரருக்குச் சொந்தமான அச்சக்கரையில் அத்தீவாரோடு சண்டை நடந்து வருகிறது. டச்சுக்காரர் இதற்கு முந்த பல சமயங்களிலும் அங்கு நேரிட்ட குழப்பங்களை சண்டை செய்து அடக்கிச் சீர்ப்படுத்தியும் சமயாசமயங்களில் அவர்கள் முரண்டிக் கிளம்பிக் கலகம் பண்ணுகிறார்கள்.

PRINTED BY E. MAENNIG AT THE EV. LUTH. MISSION PRESS, TRANQUEBAR.

## மரண அறிக்கைகள்.

எனது சகோதரனும் மலையப்பன் பொன்னையபிள்ளை குமாரனும் சென்னையில் உபாத்தியாருமாயிருந்த M. P. கிறிஸ்தியான் பிள்ளை சிலமாதங்களாக வியாதியாயிருந்து இந்த மீ 12-ம் வ. மாலை 3½ மணிக்குத் தம்மை மரணத்துக்கு ஆயத்தப்படுத்துகிறவராகத் தமது கைக்கடிகாரத்தை இடது கையில் வைத்துக்கொண்டு "இன்னும் நாலு மணி ஆகவில்லையோ? கிறிஸ்து என்னைக் கூப்பிடுகிறார், நான் போகிறேன். கர்த்தாவின் செயல் நல்லது என்ற 246-ம் ஞானப்பாட்டை வாசியுங்கள்" என்று சொல்லி, ஷெ பிரார்த்தனையை இருமுறை வாசிக்கக் கவனமாய்க் கேட்டுக்கொண்டு, கடைசியாக "இயேசுவே! இரட்சியும்" என நாலு முறை சொல்லித் தமது பரம எசமானின் நித்திய இளைப்பாறுதலுக்குள் பிரவேசித்தார். அவர் திரேகம் அடுத்த நாள் காலை 8½ மணிக்கு நமது கல்லறைத் தோட்டத்தில் சகல கிறிஸ்தவ மரியாதையுடன் சங். சா. ஞானபிஷேகம் ஐயரால் உயிர்த்தெழுக்குதலென்று புதைக்கப்பட்டது. — தலைவனை இழந்துபோன குடும்பத்தைக் கர்த்தர் ஆசீர்வதிப்பாராக. வயது 27.

"கிறிஸ்து எனக்குச் சீவன். சாவு எனக்கு ஆதாயம்"

புரசபாக்கம், 1896 – ஏப்ரில் – 16. } M. P. இராயப்பன் உபா. கல்பாளையத்தான்பட்டி, மணற்பாறை.

---

எனது மனைவியும் மாஜி சவரிராயன் உபா: குமாரத்தியுமாகிய பீரிஸ்கில்லாள் மனோமணி உபாத்தினி அம்மாள் ஒரு மாசமாய் வியாதியாய் இருந்து ஏப்பிரில் மீ 14-ம் வ. செவ்வாய் கிழமை மாலை 5½ மணிக்குக் கர்த்தருக்குள் பாக்கியமாய் மரித்து மறுநாள் சங்: சாலமோன் ஐயரவர்களால் சகல கிறிஸ்தவ மரியாதையுடன் அடக்கம் செய்யப்பட்டது.

தான் என்னுடன் 13 வருஷம் வாழ்ந்து தரங்கன்பாடி, மன்னார்குடி, மாயவரம் ஆகிய இடங்களிலுள்ள நமது மிசியோன் பள்ளிக்கூடங்களில் 17 வருஷம் உபாத்தினி வேலை பார்த்து, வியாதியில் முறுமுறுப்பில்லாமல் அநேக வேத வாக்கியங்களால் தனது விசுவாசத்தை விளக்கி "கர்த்தாவின் கைக்கும் தெய்வீக ஆளுகைக்கும் என் பிள்ளைகளை ஒப்புக் கொடுக்கிறேன், கர்த்தருடைய சித்தம் செய்யப்படக் கடவது" என்று சொல்லி தனது 6 சிறு பிள்ளைகளைக் கர்த்தருடைய பாதுகாப்புக்கு ஒப்புவித்து, பராபரன் தம்முடையவர்களுக்கு வாக்குத்தத்தம் பண்ணின நித்திய இளைப்பாறுதலுக்குள் பிரவேசித்தது. (வயது 35. 3 மீ 23 நாள்.) சங்கீதம்: 16, 6. 9.

மாயவரம். 17-4-1896 } தா. தேவசகாயம் உபா:

## அறிக்கை.

மார்ச்சு மாதத்தில் இலங்கைத் தீவுக்குப் போக விருந்த சங்: வே. ம. அந்தோனி ஐயர் திடீரென வியாதிப்பட்டதால், தாம் போகக்கூடாமற்போயிற்று என்பதைத் தெரிவிக்கக் கேட்டுக் கொண்டார்.

அரு. பத்திராதிபர்.

